# எங்கள் திரைப்படம்




வெ.பிரியதர்ஷினி

ஜ.சபரிநாதன்


அரசுப் பள்ளி மாணவர்கள்

திரை எழுத்துகள்

எங்கள் திரைப்படம்

அரசுப் பள்ளி மாணவர்களின் திரை எழுத்துகள்

சமர்ப்பணம்

அப்பாஸ் கியோராஸ்தமி
சத்யஜித் ரே

நன்றி

முன்னாள் பள்ளிக் கல்வித்துறை ஆணையர் திரு.க.நந்தகுமார் இ.ஆ.ப, அவர்கள்,
மாநில திட்ட இயக்குநர் திரு இரா.சுதன் அவர்கள்,
இணை இயக்குநர் திருமதி செ.அமுதவல்லி அவர்கள்,
தஞ்சாவூர் முதன்மைக் கல்வி அலுவலர் திரு மு.சிவக்குமார் அவர்கள்.
கும்பகோணம் கல்வி மாவட்டக் கல்வி அலுவலர் திரு.ந.ரவிச்சந்திரன் அவர்கள்,
தலைமையாசிரியர் திரு வை. சாரதி அவர்கள்
சத்யஜித்ரே திரைப்படமன்ற ஆசிரியர் திரு.ரா.தாமோதரன் அவர்கள்

திரை எழுத்துகள்

வெ.பிரியதர்ஷினி, ஐ.சபரிநாதன்
க.அனுஷ்வேல், அ.லட்சுமணன், பி.ஸ்ரீசக்தி, டி.கே.விஷ்ணு
(எட்டாம் வகுப்பு)
அ.திவ்யா, ஜெ.அன்பழகி, கு.விஷ்ணு, செ.மகாலட்சுமி
(ஒன்பதாம் வகுப்பு)
சா.ஹரிணி, சே.ரூபஸ்ரீ, அ. அன்புச் செல்வன், பி.பிரஜன்
(பத்தாம் வகுப்பு)

# திரை எழுத்துகள்

## சில வார்த்தைகள்

பள்ளிக்கல்வித்துறையானது ஒவ்வொரு அரசுப்பள்ளிகளிலும் மாணவர்களின் படைப்பாற்றலை வெளிக்கொணர திரைப்படமன்றங்களைத் துவக்கியது. இதற்குக் காரணம் எங்கள் பள்ளிதான். எங்கள் பள்ளியில், முக்கியமாக மாணவர்களின் மன அழுத்தங்களைப் போக்குவதற்கு, அவ்வப்போது ஈரான் படங்களைத் திரையிட்டு வந்தார்கள். இதைக் கேள்விப்பட்டபின், எங்கள் பள்ளியில், அரசின் திரைப்பட மன்றத் துவக்கவிழா நடக்க இருந்தது. சில நிர்வாகச் சிக்கலால், அது வேறு பள்ளிக்கு மாற்றப்பட்டது.

திரைப்பட மன்றம் வழியாக, உலக சினிமா, இந்திய சினிமா, தமிழ் சினிமா என்பது பற்றிக் கற்றுக்கொண்டிருக்கிறோம். திரைப்பட இயக்குநர் திரு செந்தில் ஜெகநாதன் சிறிது கற்றுத் தந்திருக்கிறார்கள். எது கலைப்படம்? எது பொழுதுபோக்குப் படம்? எதை நாம் பின்பற்றியிருக்கவேண்டும்?. எங்களின் ஒரே கேள்வி: 'ஏன் நம்மால் ஒரு ஈரான் படத்தைப்போன்று உண்மையான படத்தை எடுக்கமுடியவில்லை?" என்பதுதான்.

திரைப்படமன்றப் போட்டியில் வென்றவர்கள், வெளிநாடு போகலாம். நாங்கள் உள்ளூர் தாண்டியதில்லை. வெற்றி பெற்ற மாணவர்கள் செய்யாததை, நாங்கள் செய்திருக்கிறோம். எங்களுக்குப் பள்ளியில் காட்டப்பட்ட திரைப்படங்கள், மன்ற ஆசிரியர் திரு ரா.தாமோதரன் அண்ணா பரிந்துரைத்த படங்கள் குறித்து எங்கள் அனுமானங்களை விரிவாகவும் சுருக்கமாகவும் எழுதியிருக்கிறோம். படத்தின் ஒரு காட்சியை ஓவியமாக (ஓவிய ஆசிரியை திருமதி எம். சாந்தினி அவர்கள் உதவியுடன்) வரையத் தெரிந்திருக்கிறோம். படத்தின் ஆங்கிலத் துணைத் தலைப்புகளைத் தமிழ்ப்படுத்த அறிந்திருக்கிறோம். மிக நேரடியாக இயக்குநர்களிடம் மின் அஞ்சல் வழியாக உரையாடுகிறோம். நாங்கள் பார்த்த படத்தின் ஒரு காட்சியை வரைந்து குகூள் மேப்பில், அதைப் பதிவேற்றம் செய்தும் இருக்கிறோம்.

தற்கால இளம் இயக்குநர்கள் கேள்விப்படாத திரைப்படங்களை நாங்கள் பார்த்திருக்கிறோம் என்பது சந்தோஷமான ஒன்று. யாக் இன் தி க்ளாஸ்ரூம் படத்தில் வரும் ஒரு காட்சியை சே.ரூபஸ்ரீ வரைந்து அதை அப்பட இயக்குநர் டோர்ஜிக்கு அனுப்பி வைத்தோம். அவர் சே.ரூபஸ்ரீயைப் பாராட்டி மின்னஞ்சல் செய்தார். லூனானா என்ற கிராமத்தை குகூள் மேப்பில் தேடினால், மலைக்கு முன் அமர்ந்து இருக்கும் சிறுமியின் ஓவியத்தைக் காணலாம்.

ஆஸ்கார், பெர்லின், பூசான் திரைப்பட விழாப் படங்களைப் பார்க்க விரும்பகிறோம். பரிந்துரையுங்கள்

நன்றி,

வெ.பிரியதர்ஷினி
ஜ.சபரிநாதன்
அறிஞர் அண்ணா அரசு மேனிலைப்பள்ளி
கும்பகோணம்

## ஒரு கூடும் பட்டாம்பூச்சியும்

The cocoon and the buttetfly
Mohammad Salehinejad
செ.மகாலட்சுமி
ஒன்பதாம் வகுப்பு

அது ஒரு வட ஈரானிய கிராமம். அங்கே 'பர்வனே' என்ற ஏழு வயது சிறுமி, அவள் அப்பாவுடன் வசிக்கிறாள். அந்த கிராமத்தில் அடிக்கடி தீ விபத்து நடக்கும். அங்கு பல ஆண்டுகளுக்கு முன்பு தீ விபத்தில் தன் தாயை, பர்வனே இழந்தாள். அவளது காலிலும் தீயில் காயம் ஏற்பட்டது, அவள் வீட்டிலிருந்து வெகு தொலைவில் இருப்பதால் அவளது தந்தை அவளை பள்ளிக்குச் செல்ல விடவில்லை. அடிப்படை எழுத்தறிவைக் கூட பர்வனேவுக்குக் கற்பிக்க யாரையும் அவர் அனுமதிப்பதில்லை. இருப்பினும், அவர்களது வீட்டுக்கு அருகில் இருக்கும் இருக்கும் 'யாவர்' என்ற இரண்டாம் வகுப்புப் படிக்கும் சிறுவன், அவளுக்கு எழுத்தறிவு கற்றுத் தர முடிவு செய்கிறான். அவன் இந்தப் பெண்ணுக்கு நோட்டு புத்தகம் வாங்கி கொடுத்தான். யாவரின் அம்மா திட்டினாள். ஆனாலும் அவர்கள் இருவரும் நல்ல நண்பர்கள் ஆனார்கள். கூடவே யாவர் என்று அந்த பையன், பர்வேனுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தான். அவளும் படிக்கத் தொடங்கினாள்.

o

இணைப்பு:

https://youtu.be/myOUHUMOQvM

## க்கி கொக்கொவ்.குவாயின் கடைசி குரல்

(O'o: The Last Voice of Kauai)

அ. லட்சுமணன்
எட்டாம் வகுப்பு

இந்தப் பூமிக்குள் எவ்வளவு அதிசயங்கள் இருக்கிறது தெரியுமா? இந்த உலகத்தில் நிறைய அழகான விசயங்களும் அதிசியங்களும் உள்ளன. (பின்னணியில் பறவைகள் பறக்க, மரங்கள் அசைய, வண்ணத்துப்பூச்சிகள் சிறகடிக்க, பறவைகள் மரத்திலிருந்து தரை இறங்குகின்றன. க்வோ க்வ்வூ.. இந்த அழகான உலகத்தில் யாருடைய குரல் எதிரொலியாகக் கேட்கிறது. ஆனால் இந்தப் பறவைகள் நிறைய வேட்டையாடப்படுகின்றன. அந்தக் கடைசி குவாயின் கடைசிப்பாட்டு - க்கி கொக்கொவ்

0

1800ஆம் ஆண்டிலிருந்தே குவாய்கள் காட்டில் வேட்டையாடப்படுகின்றன. இவற்றிற்கு எதிராகவே நிறைய எலிகளும் பூச்சிகளும் வந்தன. பூனையும் வந்தது. அந்தப் பூனை நிறைய குவாய்களை வேட்டையாடத் தொடங்கியது. அந்தக் குவாய் பறவை பயந்து ஓடிப் பறந்தது. தன் இனத்தில் இனி யாரும் இல்லை என்று நினைத்துப் பறந்தது. அதற்குப் பதிலாக இந்தக் காட்டில் எலிகள், பூச்சிகள், பூனைகள் மட்டுமே இருந்தன. ஒருநாள், அந்தப் பறவை தூங்கி எழுந்தவுடன், மரப்பொந்தைப் பார்த்தது. நிறைய பறவைகளை விலங்குகள் கொன்றுவிட்டன என்பதை அறிந்தவுடன் குவாய் சோகம் அடைந்தது. ஆகாயத்தில் பறக்கத் தொடங்கியது. அது பறந்துகொண்டிருந்தபோது, ஒரு வாகனத்தில் குவாய் இருப்பதைப் பார்த்து நெருங்கியது. ஆனால் அதில் மனிதர்கள் இருந்தார்கள். அவர்கள் காட்டை அழிக்கத்தொடங்கினார்கள். குவாய் ஒரு மரத்தில் அமர்ந்து இளைபாறியது. அந்த மரத்தையும் அவர்கள் அழித்தார்கள். குவாய் பயந்து பறந்தது.

1987இல் ஒரு குவாய் பறவை மரக்கிளையில் அழுதுகொண்டிருந்தது. திடீரென வந்த ஒரு சூறாவளி, குவாய் பறவையைத் தன்னுடன் தூக்கிச்சென்றது. குவாய் போராடியது. ஆனால் முடியவில்லை. குவாய் இறந்துவிட்டது.. அதுமட்டுமல்ல அதனுடைய பாட்டும்தான் - க்கி கொக்கொவ். க்கி கொக்கொவ்.

**இணைப்பு**

https://www.youtube.com/watch?v=mztQrbdatXU

## ஹோம் வொர்க்

வீட்டுப் பாடம்
அப்பாஸ் கியோராஸ்தமி
அ.அன்புசெல்வன் (பத்தாம் வகுப்பு)

ஒரு கேமரா. அதற்கு முன்பு கருப்பு மஞ்சள் ஜெர்சி அணிந்த, வட்ட முகம் கொண்ட, கோழி முட்டை கண் கொண்ட சிறுவன். கேமரா பின்னாலிருந்து ஒருவர் கேள்வி கேட்டுக் கொண்டிருக்கிறார். அதற்கு அந்தப் பையன் பதில் சொல்லிக்கொண்டிருக்கிறான்.

இயக்குநர் : வீட்டுப் பாடம் எழுத உனக்கு யார் உதவுவார்கள் ?

சிறுவன் : என்னது?..(கொஞ்ச நேரம் கழித்து) என் பண்ணை முதலாளி.

இயக்குநர் : எப்படி?

சிறுவன் : (கொஞ்ச நேரம் கழித்து) எனக்கு டிக்டேஷன் தரப்படும்போது அவரைப் போய்ப் பார்ப்பேன்.

இயக்குநர் : அவர் இல்லாத போது யார் உனக்கு உதவுவார்கள்?

சிறுவன் : அவருடைய மகள்கள்.

இயக்குநர் : அவருடைய மகள்களா?

சிறுவன் : ஆமாம். அவருடைய மகள்களில் ஒருத்தி.

இயக்குநர் : எந்த நேரத்தில் நீ முடிப்பாய்?

சிறுவன் : (யோசித்தபடி மேலே பார்த்துக்கொண்டு) தெரியல?

இயக்குநர் : ரொம்ப நேரம் எடுக்குமா?

சிறுவன் : ஆமாம்

இயக்குநர் : வீட்டுப்பாடம் முன்னாடி ஏதாவது பண்ணுவியா? ஏதாவது பண்றியா? உங்க அம்மா கேப்பாங்களா?

சிறுவன் : நான் டிக்டேஷன் பண்ணுவேன். பெர்சியன் பயிற்சிகள் செய்வேன்.

இயக்குநர் : இல்லை…வீட்டு வேலை ஏதாவது செய்வியா?

சிறுவன் : எனக்குத் தெரியாது.

இயக்குநர் : பிரட் வாங்க போவியா?

சிறுவன் : எதுவும் இல்லாத போது மட்டும்.

இயக்குநர் : வேற ஏதாவது இல்லையென்றால் போக மாட்டியா? வேற ஏதாவது வாங்க

கடைக்குப் போவியா?

சிறுவன் : ஆமா. பழம் வாங்க.

இயக்குநர் : வீட்டுப் பாடத்தை சரியா பண்ண மாட்டியா? யாராவது தண்டிச்சு இருக்காங்களா?

சிறுவன் : சரியா பண்ணலன்னா தண்டிப்பாங்க.

இயக்குநர் : யாரு தண்டிப்பாங்க?

சிறுவன் : என் ஆசிரியர்?

இயக்குநர் : உங்க வீட்டில உங்க அப்பா அம்மா?

சிறுவன் : அப்பா அம்மா அடிப்பாங்க.

இயக்குநர் : எப்படி?

சிறுவன் : தெரியல ?

இயக்குநர் : எதால அடி வாங்குவ?

சிறுவன் : பெல்ட்டால்....

இயக்குநர் : எப்படி உன்னை கண்டுபிடிப்பாங்க, நீ ரொம்ப மோசமா இருக்கேன் என்று, அவங்களுக்குப் படிக்கத் தெரியாதே!

சிறுவன் : நான் ஏன் நோட்புக் காண்பிப்பேன்.

இயக்குநர் : அவங்களுக்கு எப்ப தெரியும் நீ படிக்க மாட்டேன்னு ?

சிறுவன் : பெருசா எழுதுவேன்.

இயக்குநர் : பெருசா எழுதுறது தப்பா? பெருசா பழம் வாங்கி அடி வாங்கி இருக்கியா?

சிறுவன் : இல்லை. (சிரிக்கிறான்)

இயக்குநர் : உன்னை யாராவது ஊக்கப்படுத்தி இருக்காங்களா?

சிறுவன் : இல்லை.

இயக்குநர் : யாருமே இல்லையா?

சிறுவன் : யாருமே இல்லை.

இயக்குநர் : யாராவது உன்னைத் தண்டிச்சு இருக்காங்களா?

சிறுவன் : ஆமா...

இயக்குநர் : உன்னை யாரையும் ஊக்கப்படுத்த வில்லையா?

சிறுவன் : இல்லை.

இயக்குநர் : பள்ளிக்கூடத்துல கூட இல்லையா?

சிறுவன் : பள்ளிக்கூடத்துலயா.. (யோசிக்கிறான்0 பள்ளிக்கூடத்துலயும் இல்லை. அங்கேயும் இல்லை.?

இயக்குநர் : தங்க நட்சத்திரம் வாங்கவில்லையா? நீ ரொம்ப நல்ல பையன் உங்க டீச்சர் சொன்னாங்க!.

சிறுவன் : டிக்டேஷன்ல நான் ரொம்ப மோசம்.

இயக்குநர் : டிக்டேஷன்ல்யா…

சிறுவன் : ஆமா..

இயக்குநர் : உனக்கு அந்தப் பொண்ணுங்க தப்பா எழுதியிருக்கலாம்தானே…..

இயக்குநர் : உங்க டீச்சர் லீவ். உனக்கு பிடிக்குமா?

சிறுவன் : அப்ப யாரு ஹோம்வொர்க் தருவாங்க…

இயக்குநர் : ஹோம்வொர்க் இல்லன்னா..டிவி பார்க்கலாமே…

சிறுவன் : உம்.

இயக்குநர் : உனக்கு கார்ட்டூன் பிடிக்குமா? ஹொம்வொர்க் பிடிக்குமா? உண்மையா சொல்லு..

சிறுவன் : ஹோம்வொர்க்.

இயக்குநர் : உனக்குப் பிடிச்ச கார்ட்டூன்…

சிறுவன் : Pinacchio..

இயக்குநர் : வேற…

சிறுவன் : The Wombles.

இயக்குநர் : உனக்கு கார்ட்டூன் பிடிக்குமா? The Wombles பிடிக்குமா?

சிறுவன் : பின்னால ஹோம்வொர்க்.

இயக்குநர் : ஹோம்வொர்க்க முடிக்கலைன்னா…

சிறுவன் : ஹொம்வொர்க் முடிச்சபின் மாலையில் டி.வி. பார்ப்பேன்.

இயக்குநர் : The Wombles மாலையில் டி.வி.யில இல்லையே… செய்திகள் பார்ப்பியா?

சிறுவன் : நான் படுக்கப்போகும்போது செய்திகள் பார்ப்பேன்.

இயக்குநர் : நல்லது. எப்பவுமே 20க்கு 20 எடுப்பியா?

சிறுவன் : இல்ல.

இயக்குநர் : 20க்கு 20ன்னா என்னன்னு உங்க அப்பா அம்மாவுக்குத் தெரியுமா?

சிறுவன் : தெரியும்.

இயக்குநர் : பண்ணை முதலாளிக்கு....

சிறுவன் : தெரியும்.

இயக்குநர் : ஒருவேளை நீ 20க்கு 20 எடுத்தா, என்ன எதிர்பார்ப்ப....

சிறுவன் : (பதில் சொல்லத் தெரியாமல் முழித்தபடி சிரிக்கிறான்)

இயக்குநர் : என்ன அன்பளிப்பை நீ விரும்புவ...

சிறுவன் : கேக்.

இயக்குநர் : பிடிக்குமா....

சிறுவன் : ஆமா..(தலையாட்டியபடியே சிரிக்கிறான்)

இயக்குநர் : 20க்கு 20 கிடைத்தால் என்ன செய்வ?

சிறுவன் : ம்...ம்... இரண்டு கேக்....

இயக்குநர் : ஒருவேளை மூணு 20 வாங்கிட்டா....

சிறுவன் : வந்து...

இயக்குநர் : என்னவேணும்....

சிறுவன் : கேக்

இயக்குநர் : எத்தனை?

சிறுவன் : மூணு... (சிரிக்கிறான்)

இயக்குநர் : ஒருவேளை சராசரி 20 வாங்கிட்டா....

சிறுவன் : சராசரின்னா... (பதில் சொல்லாமல் முழிக்கிறான்)

இயக்குநர் : கேக் கடை முழுசும்.. சரியா?

சிறுவன் : ஆமா..(தலையாட்டியபடியே சிரிக்கிறான்)

இணைப்பு

https://www.youtube.com/watch?v=Z3WIxmwyU8I

## ஒரு பிரச்சனைக்கு இரண்டு தீர்வுகள்

Two solution for one problem
அப்பாஸ் கியாரோஸ்தாமி
வெ.பிரியதர்ஷினி
எட்டாம் வகுப்பு

ஒரு வகுப்பறை. ஒரே கூச்சல். அறையில் இரண்டு மாணவர்கள் மட்டும் அமர்ந்திருக்கிறார்கள். ஒரு பையன் தனது நோட்டுப் புத்தகத்தில் கோடு கிழிக்கிறான். இவன் பெயர் நாடர். கொஞ்ச தூரத்தில் ஒரு பையன் அமர்ந்து சிரிக்கிறான். நீல உடை அணிந்திருக்கிறான். இவன் பெயர் டாரா.

நாடரும் டாராவும் நண்பர்கள். ஒரு நாள் நாடர் புத்தகத்தை டாரா வாங்கிக் கொண்டு செல்கிறான். சில நாள் கழித்துத் திருப்பி தருகிறான். டாரா தந்த தன் புத்தகத்தை நாடர் புரட்டிப் பார்க்கிறான். ஒரு பக்கம் கிழிந்துள்ளது. அதைப் பார்த்துக் கோபம் கொண்ட நாடர், டாராவின் புத்தகத்தைக் கிழிக்கிறான். டாராவோ நாடரின் பேனாவை உடைக்கிறான். அதற்கு பதில் நாடர், டாராவின் கிழிக்கிறான். அதற்குப் பதிலாக, திரும்பவும் டாராவின் புத்தகத்தை நாடர் கிழிக்கிறான். பிறகு டாராவின் உடையை நாடர் கிழிக்கிறான். நாடரின் ஸ்கேலை எடுத்து, தன் தொப்பியை மேலே தூக்கி விட்டு, ஸ்கேலை டாரா, சுக்கு நூறாக உடைக்கிறான். அதற்குப் பதிலாக, நாடர் டாராவின் தொப்பியைக் கிழிக்கிறான். நாடரின் துண்டை எடுத்து, டாரா கீழே போடுகிறான். இரண்டு பேரும் கட்டி பிடித்துக் கொண்டு சண்டை போடுகிறார்கள். பிறகு அந்த கரும்பலையில் கிழிந்ததை எல்லாம் வித்தியாசமாக காட்டுகிறார்கள். சண்டையில் டாராவின் கண் அடிபட்டுவிட்டது. நாடருக்கு நெற்றியில் அடி.

இப்போது அடுத்த காட்சி.

நாடர் மற்றும் டாரா. நாடரின் புத்தகத்தை டாரா வாங்கினான். கொஞ்ச நாள் பொறுத்துத் திரும்ப கொடுக்கிறான். நாடார் தன் புத்தகத்தைப் பார்க்கிறான். அங்கே கிழிந்து இருக்கிறது. அதை டாராவிடம் காட்டுகிறான். நாடரிடம் இருந்து புத்தகத்தை எடுத்துக் கொண்டு சென்று, கிழிந்த பகுதியை பசை போட்டு ஒட்டிக் கொடுக்கிறான்.

இனி நாடரும் தாராவும் இன்றும் என்றும் நண்பர்கள் தான்.

0

இணைப்பு:

https://youtu.be/_oDD8B_O6xM

## குட்டிப் பறவையும் இலையும்

(பனிக்காலம்)

Lena von Dohren
க. அனுஷ்வேல்
எட்டாம் வகுப்பு

சிவப்பு மூக்கு கொண்ட ஒரு கருப்புக் குட்டி பறவை பூவாளியால், ஒரு காய்ந்த இலைக்கு நீரை ஊற்றுகிறது. அப்போது அந்த இலை மரத்திலிருந்து கீழே உதிர்ந்தது. உடன் அந்த குட்டிப் பறவையும் கீழே குதித்தது. தரை முழுவதும் ஒரே பனி. திரும்ப அந்த இலை மரத்தின் கீழே பறந்து சென்றது. குட்டிப் பறவையும் பின் தொடர்ந்தது.

ஒரு மரத்தில் ஒரு மூக்கு தெரிந்தது. அது ஒரு சிவப்பு நரி. அது காகத்தை வேட்டையாட வந்தது. அப்பொழுது அந்த இலை நரியின் கண்ணில் விழுந்தது. நரி திடீரெனப் பாய்ந்து மரத்தில் மோதி கீழே விழுந்தது. அந்த இலை மறுபடியும் பறந்து சென்றது. காகமும் பின்தொடர்ந்தது.

அந்தப் பணி குளிரில் உறைந்த ஒரு ஏரிக்கு அந்த இலை பறந்து சென்றது. காகம் பின் தொடர, நரியும் பின் தொடர்ந்தது. திடீரென காகமும் நரியும் வழுக்சிக் கொண்டு அந்த ஏரியில் போய் விழுந்தது. காகம் அந்த இலையை எடுத்து விட்டது.

அப்பொழுது அந்த ஏரியின் மேற்புறம் ஒரு விரிசல் விழுந்தது. அந்த விரிசல் பெரிய விரிசலாக மாற, ஏரியின் உள்ளே நரி விழுந்தது. அந்தக் குட்டி பறவை இலையை தூக்கிக் கொண்டு வெளியே சென்றது.

அப்பொழுது நிறைய இலைகள் அங்கு பறந்து கொண்டிருந்தன. அந்த இலைகளுடன் தான் கொண்டு வந்த இலையை அந்த குட்டிப் பறவை சேர்த்துப் பறக்கவிட்டது. இலை இல்லாமல் அந்த குட்டி பறவை சோகம் அடைந்தது. சோகத்துடன் திரும்பிப் பார்த்த பறவை, ஒரு கணம் அதிர்ந்தது. நரி பனிக்கட்டியாக மாறிவிட்டது.

ஆனால் அந்த நரி பனியை உடைத்துக் கொண்டு, குட்டிப் பறவையை வேட்டையாடப் போனது. அந்த குட்டி பறவை பயந்து ஓட, நரியும் துரத்திக் கொண்டே வந்தது. ஓடியபடி அந்தக் குட்டிப் பறவை மலையின் உச்சித்து வந்து நின்றது. குட்டி பறவைக்கு அதற்கு மேல் என்ன செய்வது என்று தெரியவில்லை.

அந்தக் குட்டிப் பறவை தைரியமாக மலை மேலிருந்து குதித்தது. அந்த குட்டிப் பறவை பறப்பதற்குக் கற்றுக் கொண்டது. அது நரியிடமிருந்து தப்பித்துப் பறந்து சென்றது.

பிறகு, அந்தக் குட்டிப் பறவை, அந்த மரத்தில் புதிதாகத் துளிர்த்த இலைக்குப் பூவாளியால் தண்ணீர் ஊற்றுகிறது.

o

இணைப்பு

https://youtu.be/Y-ua_3K80RI

## *சர்க்கரைக் கட்டி*

A cube of sugar
Reza Mirkarimi
Iran movie
ஜெ.அன்பழகி
ஒன்பதாம் வகுப்பு

இத்திரைப்படம் ஒரே நேரத்தில் இரண்டு கதைகளைக் கொண்டுள்ளது: பசந்திதேவை மையமாகக் கொண்ட முக்கிய கதைக்களம் ஒன்று. இன்னொன்று ஹார்மோஸை மையமாகக் கொண்ட துணைக்கதை. பாரம்பரியமான ஈரானிய குடும்பத்தில் சதி மிக்க வாழ்க்கையின் ஒரு நாளை விவரிக்கிறது. குடும்பத்தில் இளைய பெண்ணான பசந்திதே, தன் தாய், அவளது வயதான மாமா , அத்தையுடன் வசிக்கிறாள். அவர்கள் ஒரு கிராமத்தில் ஒரு பழைய வீட்டில் வசிக்கிறார்கள். அவள் விரைவில் வெளிநாட்டில் படிக்கும் ஒரு குடும்ப நண்பரின் பேரனைத் திருமணம் செய்ய உள்ளார். பசந்திதேவின் திருமணத்திற்கு எல்லாம் ஏற்கனவே ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது, அவளுடைய சகோதரிகள் அனைவரும் ஒவ்வொருவராக பழைய வீட்டிற்கு வருகிறார்கள்.

இதற்கிடையில், பசந்திதேவின் சகோதரியின் கணவர் ஹோர்மோஸ் சமீபத்தில் சிறையில் இருந்து விடுவிக்கப்பட்டார். பசந்திதேவின் மற்றொரு சகோதரியின் கணவரான ஹமீத்தின் உதவியுடன், அவர் ஒரு புதையலைக் கண்டுபிடிக்க முயற்சிக்கிறார். அது பசந்திதேவின் வீட்டில் எங்கோ புதைந்து கிடப்பதாக அவர்கள் நம்புகிறார்கள், திருமணச் சடங்கு நடக்கும் போது பதுங்கிச் செல்கிறார்கள்.

இணைப்பு

https://www.youtube.com/watch?v=Rkwa3z5P498

## *ஸ்கிரிபிலிங்*

ஆதித்யா கனகராஜன்
ஜ. சபரிநாதன்
எட்டாம் வகுப்பு

அந்தக் குழந்தையின் பெயர் அஞ்சு. வயது 5. விளையாட்டு மைதானத்தில் 5 விளையாடிக் கொண்டிருக்கிறாள். பிறகு ஒரு பள்ளியில், ஒரு வகுப்பறையில், ஆசிரியர் குழந்தைகளுக்கு ஏ பார் ஆப்பிள் என்று சொல்லி கொடுத்துக் கொண்டிருக்கிறார்.

'ஒரு மாத காலமாக நான் ஆல்பாபெட் சொல்லிக் கொடுக்கிறேன். அனைத்து மாணவர்களும் நன்றாக எழுதுகிறார்கள். ஆனால் அஞ்சு இருக்கு மட்டும் எழுத வரவில்லை' என்று ஆசிரியர் அஞ்சுவின் அம்மாவிடம் சொல்கிறார்.

அப்பொழுது அஞ்சு ஒரு படகை வருகிறாள். அஞ்சு எழுதிய அனைத்தையும் அவருடைய அம்மா ஒரு மருத்தவரிடம் காட்டினாள். அஞ்சுவின் நடவடிக்கையை பார்த்த டாக்டர், அஞ்சுவருக்கு டிஸ்கிராபியாவாக இருக்கலாம் என்று கூறுகிறார்.

'அப்படி என்றால்?" அஞ்சுவின் அம்மா ராஜி டாக்டரிடம் கேட்கிறாள்.

'மற்ற குழந்தைகள் போல அவளால் சரியாக எழுத முடியாது. அது ஒரு எழுதுதல் குறைபாடு. அதை முழுமையாகச் சரி செய்ய முடியாது. ஆனால் உங்கள் ஆதரவு இருந்தால், அதை கண்டிப்பாக உங்களால் சரி செய்ய முடியும். தைரியமாகக் கற்றுக் கொடுங்கள்" என்றார் டாக்டர்.

இரண்டு வாத்து பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தாள் அஞ்சு.

"வா படிக்கலாம்" கூப்பிட்டாள் ராஜி

"இரு அம்மா" என்று சொல்லிவிட்டு அஞ்சி வருகிறாள்.

அவருடைய அம்மா A எழுதச் சொல்லிக் கொடுக்கிறாள். A எழுது என்று சொல்கிறாள். அஞ்சுவோ எழுதாமல் பேப்பரில் கிறுக்குகிறாள். இது Aவா? என்று கத்துகிறாள் அவருடைய அம்மா. பிறகு அவளை அம்மா அழுகிறாள். இதைப் பார்த்த அஞ்சு, A என்று எழுதுகிறாள். ஆனால் அது D. அதைப் பார்த்த ராஜி, 'உனக்கு வேற என்ன எழுதத் தெரியும்?" என்று கேட்கிறாள். அதற்கு அஞ்சு z என்று எழுதுகிறாள்.

இதனால் நம்பிக்க அடைந்த அவருடைய அம்மா அஞ்சுக்கு எழுதக் கற்றுத் தருகிறாள். கடற்கரை மண்ணில், புத்தகத்தில், கண்ணாடியில் எழுதி கற்றுத் தருகிறாள்.

பிறகு காலம் கடக்கிறது.

ஒரு காட்சியில் மணல் கடிகாரம் காட்டப்படுகிறது. மணல் விழுவது முடிந்த பின், காட்சி வேறாக காட்டப்படுகிறது. ராஜியும் அஞ்சுவும் கடற்கரையில் அமர்ந்திருக்கிறார்கள். 'நான் கரைக்குப் போகட்டுமா" என்று அஞ்சு கேட்கிறாள். "போ. ஆனால் தண்ணிக்கு அருகில் போகாதே" என்றால் ராஜி. 'சரி' என்றபடி, கடற்கரை மணலில், அலை வந்து தீண்டும் படி, 'ANJU' என்று எழுதி காட்டுகிறாள். ராஜி பார்த்து மகிழ்கிறாள். அஞ்சு கலகலவெனச் சிரிக்கிறாள்.

*மேலே வானம் தெள்ளத் தெளிவாக இருக்கிறது.*
o

*இணைப்பு*

https://youtu.be/0hAgwQF9uNI

# மல்லி திரைப்பட விமர்சனம்

வெ.பிரியதர்ஷினி - ஜ.சபரிநாதன்

**அறிமுகம்**

இந்த படம் நேஷனல் சென்டர் ஃபார் சில்ட்ரன் அண்ட் யங் பீப்புள்காக, தேசிய திரைப்பட கழகத்தால் தயாரிக்கப்பட்டது.

**கதை**

மல்லி ஒரு காட்டுவாசி சிறுமி. மரங்களையும் மலைகளையும் மேகங்களையும் புல்வெளிகளையும் மான்களையும் யானைகளையும் அருவியையும் ஆற்றையும் நேசிப்பவள். இன்னும் அதிகமாக சொல்லப்போனால் மனிதர்களை அதிகம் நேசிப்பவள். அவள் காட்டுக்கு விடுமுறைக்காக வருகிறாள் குக்கூ. குக்குவின் தந்தை வன அதிகாரி. குக்குவால் பேச முடியாது. காதும் கேட்காது. அவள் மீது பாசம் கொண்ட மல்லி, ஆலமரத்துக்கு அடியில் இருக்கும் ஓர் காட்டுக் கிழவியிடம் வழி கேட்கிறாள். மயில் கடவுளிடம் இருக்கும் ஒரு நீலக்கல் கிடைத்தால், குக்கூவால் பேச முடியும் என்று பாட்டிக் கூறுகிறாள். அவள் கனவு காண்கிறாள். அதன்படியே அவளுக்கு ஒரு நீலக்கல் ஆற்றில் கிடைக்கிறது. அந்த நீலக் கல்லை கொண்டு ஒரு மாலையை செய்கிறாள். காட்டை விட்டு, ஊருக்கு சென்று கொண்டிருக்கும் குக்கூவை மறித்து, குக்கூவின் கழுத்தில் அணிவிக்கிறாள். இதில் மல்லியின் அன்பு வெளிப்படுகிறது. அன்பும் நம்பிக்கையும் தான் வாழ்க்கை என்கிறது படம். இப்படத்தின் கதையை சந்தோஷ்சிவனும், ரவி தேஷ் பாண்டேவும் உருவாக்கியுள்ளனர்.

**கதாபாத்திரங்கள்**

ஸ்வேதா மல்லியாக, வனிதா குக்கூவாக, ஜனகராஜ் விலங்கு மருத்துவராக, மனோஜ் பிள்ளை லெட்டர் மாமாவாக நடித்துள்ளனர். இதில் குக்கூவாக நடிக்கும் வனிதா உண்மையில் செவி மாற்று திறனாளி. நடிப்பு என்று தெரியாதபடி இயல்பாகவே வனிதா நடித்துள்ளார். மல்லியாக நடித்திருக்கும் சுவேதா உண்மையில் காட்டுவாசிப் பெண்ணாகவே வாழ்ந்துள்ளார். லெட்டர் மாமாவின் நடிப்பு நன்றாக இருந்தாலும் அவருக்கு அதிகமான இடம்,படத்தில் இல்லை. மல்லியின் அம்மாவாக நடித்திருக்கும் நடிகை, கர்ப்பிணி போன்று நடித்தார். சித்தியாக நடித்த அவர் நடிப்பு, மிகையாக இருந்தது. பாட்டியாக நடித்தவர் மனநலம் பாதிக்கப்பட்டவர்போல் நடித்து சிறப்பாக இருந்தது. மரவெட்டிகளின் நடிப்பு செயற்கையாக இருந்தது.

**இசை**

அஸ்லாம் முஸ்தபாவின் இசை படத்துக்கு உயிரோட்டமாக இருந்தது. ஓயா ஓயா ஓயா ஓ என்ற ஓசை, படத்தை அழகாக காட்டியது. வானம் வானம் வானம் உயிரே உயிரே வானம் என்ற பாட்டுக்கு, இசை நன்றாக அமைந்துள்ளது. சில பாடல்கள் வரியை இசையால் கேட்க முடியவில்லை. வாயில் முணுமுணுக்கும்படி இசை அமைந்ததுள்ளது. 'நான நான நான' என்ற இசை படத்தின் முக்கியமான காட்சிகளில் ஒலிக்கிறது. ஒவ்வொரு கதாபாத்திரத்திற்கும் ஒவ்வொரு இசையை வைத்திருந்தால் நன்றாக இருந்து இருக்கும்.

**ஒளிப்பதிவு**

இப்படத்திற்கு ஒளிப்பதிவை சந்தோஷ் சிவன் அவர்களே செய்துள்ளார். ராமன் கிருஷ்ணா ராமனன், பிரகாஷ் மோகபத்ரா கிருஷ்ணா உடனிருந்து ஒளிப்பதிவு செய்துள்ளனர். குக்கூவும் மல்லியும் இரவு காட்டுக்குள் செல்கிறார்கள். இரவு விடிந்து, பகல் தோன்றும் காட்சி அற்புதமாக இருந்தது. புல்லின்மேல் இருக்கும் பனித்துளிகள் மேல் சூரியன் தெரியும் காட்சி சிறப்பாக ஒளிப்பதிவு செய்யப்பட்டுள்ளது.

**ஒலிப்பதிவு**

இயற்கைக் காட்சி காட்டும்போதெல்லாம் யானையின் பிழிர்களையும் மயிலின் அகவலையும் ஒலிப்பதிவு செய்துள்ளனர். மயில் தோகை அசையும் காட்சியில், பாம்பின் ஓசை கேட்பதுபோல் இருந்தது.

**பின்னணி குரல்**

குக்கூவின் தந்தை குரல் கம்பீரமாக, பொருத்தமாக இல்லை.

**வசனம்**

மரங்களை வெட்டி மனுஷன் இயற்கையோட கோபத்தை சம்பாதிக்கிறான். மிருகங்களை அழிச்சி அந்த வம்சத்தோட நஷ்டத்தை சம்பாதிக்கிறான்.
கடவுளை நீ பார்க்கல ஆனா கடவுள் உன்னை பார்த்தாரு.
குளம் அசுத்தம் ஆகிவிட்டால் அதிகாலையில் எழுந்து பணித்துளிகளைச் சேமித்து குளத்தில் போட வேண்டும். அப்பொழுதுதான் குலம் சுத்தமாகும்.
பேரு தெரிவதற்காக நான் வைத்தியம் பார்க்கல மிருகங்கள் நல்லா இருக்கணும்னு வைத்தியம் பார்க்கிறேன்.
மயில் கடவுள்கிட்ட ஒரு நீலக்கல் இருக்கு: அதிலிருந்து தான் காட்டுக்கு சக்தி கிடைக்குது
இப்படியான வசனங்கள் கதையை உயிரோட்டம் ஆக்குகின்றன. இதை எழுதியவர் ராஜா சந்திரசேகர்.

**கதைசொல்முறை**:

படம் நேரடி கதை/ கற்பனை என்ற விதத்தில் கதை சொல்லப்படுகிறது. கனவுகள் தான் கதையை நகர்த்துகின்றன. மல்லி காணும் ஒவ்வொரு கனவின் பின்பும் ஒரு திரைக்கதை இருக்கிறது. அவள் எதைக் கனவு காண்கிறாளோ அதுவே நடக்கிறது. எதார்த்தம்,கனவு என்ற இரண்டு வகையில் கதை சொல்லப்படுகிறது.

**பாடல்கள்**:

'வானம் வானம் வானம்/ உயரே உயரே வானம்/அந்த வானம் போலே நானும் வளர்ந்திட வேணும்'

'முன்னாலே நீ முன்னாலே /உன்னாலே எல்லாம் உன்னாலே / அருவி பாடுது உன்னாலே'

'முத்து முத்து பனித்துளி / சின்னஞ்சிறு புல்வெளி'

ஆகிய பாடல்கள் ரசிக்கும்படி உள்ளன. சொற்கள் எளிமையாகப் பாடும்படி ராஜா சந்திரசேகர் எழுதியிருக்கிறார்.

**நடனம்**:

முன்னாலே நீ முன்னாலே என்ற பாட்டிற்கு பிறகு குக்கூ, மல்லி, மயில் கடவுள் மூவரும் ஆடும் நடனத்தை விஷ்ணுவர்தன் நன்றாக அமைத்துள்ளார்.

**ஒப்பனை**:

மயில் கடவுள், மல்லி ஆகியோருக்கு செய்யப்பட்ட முகவப்பனை நன்றாக இருந்தது. காட்டுவாசி தன்மை வெளிப்படுத்தும்படி அனுராதா ஒப்பனை செய்துள்ளார்.

**உடை அலங்காரம்**:

மயில் கடவுள் மல்லி ஆகியோருக்கு அனுராதா செய்த உடை அலங்காரம் நன்றாக இருந்தது. வேட்டைக் காரர்களின் உடை நன்றாக இல்லை.

**கலை வடிவம்**:

மசினகுடியின் ஒரு பகுதியில், காட்டுக் கிராமத்தை வடிவமைத்து இருக்கிறார், ஸ்ரீராம். குடிசைகள் தத்ரூபமாக வடிவமைக்கிறார்கள்.

**செழுமையாக்கம்**:

படத்திற்குத் தேவையற்ற காட்சிகளை ஸ்ரீகர் பிரசாத் நீக்கியுள்ளார். மல்லி குதிக்கும் காட்சியை படத்திலிருந்து நீக்கி இருக்கலாம்.

**தயாரிப்பு**

சஜின் ராகவன், கணபதி சுப்ரமணியன் ஆகியோர் கூட்டு தயாரிப்பில் உருவான இந்த படம், ஒன்பது நாட்களில், 25 லட்சத்தில் தயாரிக்கப்பட்டு வெளியானது. நேஷனல் பில்ம் டாவுமென்ட் கார்பரேஷனால் தயாரிக்கப்பட்டது.

விருதுகள்:

சிறந்த திரைப்படம், சிறந்த இயக்கம், சிறந்த குழந்தை நட்சத்திரம், சிறந்த இசை ஆகிய விருதுகளை போலந்த்' அமெரிக்கா, உருகுவே, கைரோ ஆகிய சர்வதேச திரைப்பட விழாக்களில் பரிசு பெற்றது. இந்தியாவின் 46வது தேசிய திரைப்பட விழாவில் சிறந்த சுற்றுச்சூழல் படத்திற்கான விருதை பெற்றுள்ளது.

இப்படம் கிரீன் பிலிம் கிரிட்டிசசம் என்ற தலைப்பில் (green film criticism) சிறந்த விருதுகளைப் பெற்றுள்ளது. சுற்றுச்சூழல் சார்பான இந்த படம், பசுமையான உலகத்தை நினைவூட்டுகிறது.

**சிறப்பம்சம்:**

அன்பு, பாசம், இயற்கை, நட்பு ஆகியவற்றைக் கொண்டுள்ளது.

**எதிர் அம்சம்:**

எல்லா இடத்திலும் ஒரே இசையை நிரப்புவது எரிச்சலாக இருந்தது. சில இடங்களில் பாடலும் வசனமும் புரியவில்லை.

நான் கற்றுக் கொண்டது:

இயற்கையை அழிக்காமல் வாழ்வது, அன்புடன் வாழ்வதைக் கற்றுக்கொண்டேன்.

0

இணைப்பு

https://www.youtube.com/watch?v=djJuUokAwxE

# கல்

(Stone)

சாஹிஹ் புஹாரி
சா.ஹரிணி
பத்தாம் வகுப்பு

தார்ச்சாலை. அதன் நடுவில் ஒரு சின்னஞ்சிறு சதுரமான கல். வாகனங்கள் விரையும் சப்தம் கேட்கிறது. அந்த வழியில் செல்லும் ஒருவரின் கால் அந்தக் கல்லில் இடறுகிறது. ஆனால் அவர் அதைக் கடந்துச் செல்கிறார். அந்தக் கல் கொஞ்சம் நகர்ந்திருக்கிறது. கொஞ்ச நேரம் கழித்து, ஒரு சைக்கிள் அந்தக் கல்லின்மீது பெல் சப்தத்துடன் மோதிக் கடந்து செல்கிறது. கல் கொஞ்சம் நகர்கிறது. சிறிது நேரம் போகிறது. இரண்டு பேர் அந்தச் சாலையில் வருகிறார்கள். ஒருவர் கல்லை எடுக்க எத்தனிக்கிறார். இன்னொருவர் வேண்டாம் என்று தடுக்கிறார். கொஞ்ச நேரம் கழித்து, கண் பார்வை இல்லாத ஒருவர், அந்தச் சாலையில் நடக்கிறார். அவர் கையில் இருந்த கோல், அந்தக் கல்லில் மேல் படுகிறது. ஒரு கல் இருப்பதை அவர் உணர்கிறார். பிறகு, அவர் மெதுவாகக் குனிந்து, சாலையில் வருவோர் போவோருக்குத் தொந்திரவு செய்யும் கல்லை எடுக்கிறார்.

"சாலையில் தொந்திரவு செய்யும் எந்தவொரு பொருளையும் அகற்றுவது என்பதே கருணை" என்ற அல்-புகாரியின் வரிகளுடன் என்ற வரிகளுடன் இந்த மௌனப் படம் முடிகிறது. அன்பையும் பொறுப்பையும் கொண்ட இந்த ஒரு நிமிடக் குறும்படத்தை சாஹிஹ்புகாரி இயக்கியுள்ளார்.

0

இந்தப் படம் பார்த்த பிறகு, "வயதானவர் ஒரு சாலையின் நடுவில் இருந்த கல்லை அகற்றும்போது, ஏன் இளைஞர்கள் அதைச் செய்யவில்லை?" என்ற கேள்வி படம் முடிந்தபின் எனக்குள் எழுந்தது. இனி சாலையில் தொந்திரவு செய்யும் எந்தப் பொருளையும் அப்புறப் படுத்தவேண்டும் என்ற எண்ணம் இந்தப் படத்தின்மூலம் எனக்குள் எழுந்தது.

இணைப்பு

https://www.youtube.com/watch?v=5hPtU8Jbpg0

## என் மரம்

My Tree

Abbas Kiarostami

சே. ரூபஸ்ரீ
பத்தாம் வகுப்பு

காட்சி ஒன்று

பலகை. பச்சை, மஞ்சள், கரும்பச்சை நிறம் நிறைந்த பலகை. ஒருவர் வலது கையில் மஞ்சள் வர்ணம் தீட்டியது. பிறகு மஞ்சள் கோடு. அதன் அருகில் பச்சை நிற கோடு. அதற்கு இடையில் நீல நிறம். கடைசியில் கருநீலம். இதற்கு மேல் ஆரஞ்சு நிறம். பிறகு தூரிகைக் கொண்டு பச்சை நிறத்தைத் தீட்டுகிறான்.

காட்சி இரண்டு

ஒரு அழகிய வானம். அதன் கீழே நீல நிற கடல். அதனைத் தொடர்ந்து கடற்கரை மணல். ஒரு ஓரமாக காய்ந்த கிளைகளைக் கொண்ட ஒரு மரம்.

காட்சி மூன்று

வெள்ளை நிற துப்பட்டா அணிந்த பெண். அந்த காய்ந்த வறண்ட மரத்திற்குத் தண்ணீர் ஊற்றிவிட்டு திடீரென மாயமாக மறைந்து விட்டாள்.

காட்சி நான்கு

மீண்டும் வெளியில் ஒருவரின் கை தோன்றி தூரிகைக் கொண்டு அந்த காய்ந்த மரத்திற்குப் பச்சை நிற வர்ணம் கொண்டு மரத்தின் இலைகளை உருவாக்குகிறது.

காட்சி ஐந்து

ஒருவன் வண்ணம் தீட்டப்பட்ட மரத்தின் அடியை, ரம்பம் கொண்டு அறுக்க, அந்த காய்ந்த மரத்தின் அடி சரிந்து விழுந்ததும் செல்கிறான்.

காட்சி ஆறு

அந்தக் காய்ந்த மரத்தின் அடி சரிந்து விழுந்தும்கூட, அந்த வர்ணம் தீட்டப்பட்ட மரத்தின் இலைகள் அந்தரத்தில் மிதக்கின்றன.

காட்சி ஏழு

ஒருவரின் கை, தூரிகையைக் கொண்டு அந்த வர்ணம் தீட்டிய மரத்தின் அடியை வரைகிறது.

காட்சி எட்டு

அந்தக் கடற்கரைக்கு உயிரூட்டும் வகையில், அழகிய இலைகள் கொண்ட மரம் உருவாகுகிறது.

காட்சி ஒன்பது

துப்பட்டா அணிந்த பெண் வலது கையில் தண்ணீர் வாளியும், இடது கையில் உரமும் கொண்டு மரத்தின் அருகில் செல்கிறாள். தண்ணீரும் உரமும் சேர்த்து ஊற்றிவிட்டு மறைகிறாள்.

0

இணைப்பு

https://youtu.be/DfHHlwY96X4

## கர்ண மோட்சம்

முரளி மனோகர்
பி.ஸ்ரீசக்தி

கோவிந்தன் என்பவர் கர்ணன் வேடம் போடுபவர். அவரை ஒரு நிகழ்ச்சிக்காக அவர்களது பள்ளிக்கு வர சொன்னார்கள். ஆனால் திடீரென்று அவரது பள்ளி தலைமை ஆசிரியர் உயிரிழந்ததால், அந்த நிகழ்ச்சியை அடுத்த மாதம் ஒத்தி வைத்த செய்தியை அப்பள்ளிக் கண்காணிப்பாளரிடம் தெரிந்து கொண்டார்.

அவருக்கு திரும்பிச் செல்ல பணம் இல்லாததால் அவர் பள்ளி ஆசிரியரை அணுகினார்.அவர் வர முடியாத காரணத்தால், கோவிந்தனை தன் வீட்டிற்கு வரச் சொன்னார். பசியின் காரணமாகத் தனது மகனைச் சிற்றுண்டி கடைக்கு அழைத்துச் சென்றார். தனது மகன் கதிருக்கு ஒரு வடையை வாங்கினார், இவர் தண்ணீரை வாங்கிப் பருகினார்.அவர் மீண்டும் தண்ணீர் கேட்டபோது கடைக்காரர் கோவிந்தனை உதாசினப்படுத்தினார்.

அங்கிருந்த தண்ணீர் தொட்டியில் தண்ணீர் குடித்தார். அப்போது அக்கடையில் வேலை செய்யும் சிறுமி ஜானகி ,அங்கு வந்தாள். கோவிந்தன் அச்சிறுமிக்கு கூத்துக் கற்றுக் கொடுத்தார். அந்த கடையின் முதலாளி அச்சிறுமியை அழைத்துச் சென்றுவிட்டார். மீண்டும் அக்கறையின் முதலாளி அச்சிறுமையின் முகத்தில் தேனீரை ஊற்றினார்.அதன் பிறகு கோவிந்தன் அவர் ஊருக்குச் சென்று கொண்டிருந்த போது அச்சிறுமி கோவிந்தனுக்குக் குரு காணிக்கையைச் செலுத்தினாள்

.

அவர் தன்னுடைய ஊருக்கு செல்லும்போது தன்னுடைய உடைகளைத் தானம் செய்துவிட்டு ஊருக்குத் திரும்பி விட்டார்.

இணைப்பு

https://www.youtube.com/watch?v=m2hnQCz_jnI

## தி ரெட் பலூன்

THE RED BALLOON

ALBERT LUMORESE

டி.கே.விஷ்ணு
எட்டாம் வகுப்பு

பாரிஸ் நாட்டில் ஒரு சிறுவன் வசித்து வந்தான். அந்த சிறுவன் வெளியே செல்லும்போது வழியில் சிவப்பு நிறத்தில் ஒரு பலூனைப் பார்க்கிறான். அவன் உயரத்தில் ஒரு கம்பியின் மீது மாட்டிக் கொண்டிருந்த அந்த பலூனை அவனுடன் எடுத்துச் செல்கிறான்.

அவன் பள்ளிக்கு செல்வதற்காகப் பேருந்து நிலையத்தில் காத்திருந்த போது, பேருந்தில் ஏறாமல் அவன் வேகமாக ஓடி செல்கிறான். சென்ற பிறகு அங்கு வேலை செய்பவரிடம் என்னுடைய பலூனைப் பத்திரமாக பார்த்துக் கொள்ளுங்கள் நான் வகுப்பறைக்கு சென்று வருகிறேன் என்று சொல்லிவிட்டு செல்கிறான்.

பாடம் முடிந்தவுடன் அவரிடம் பலூனை வாங்கிக் கொண்டு பள்ளிக்கு வெளியே சென்றான். வெளியே சென்ற போது மழை பெய்து கொண்டிருந்தது. அவன் நனைந்து கொண்டு பலூனை நனையாமல் அங்கு சென்று கொண்டிருந்த ஒவ்வொருவர் உடையிலும் பாதுகாப்பாக அந்த பலூனை வீட்டுக்கு எடுத்துச் சென்றான்.

அவனுடைய அம்மா அந்தப் பலூனை வெளியே வீசி விட்டாள். அந்த பலூன் பறந்து அவன் அரை ஜன்னல் ஓரத்தில் வந்து நின்றது.அதை பார்த்த அவன் நீ இங்கேயே இரு நான் கூப்பிடும் போது வா என்று கூறிவிட்டு வீட்டை விட்டு வெளியே வந்தான். வந்தவுடன் பலூன் வா என்று அழைத்தான் அழைத்தவுடன் அது அருகில் வந்து அவன் கையில் வராமல் அங்கும் இங்கும் மறைந்து விளையாடிக் கொண்டிருந்தது. பிறகு அந்த பலூன் அவன் கையில் கிடைத்தது,பின் ஒரு பேருந்து வந்தது அவன் பேருந்தில் அமர்ந்து சென்றான்.

அந்த பலூன் அவன் பின் தொடர்ந்து பறந்து சென்றது. அவன் பேருந்தில் இருந்து இறங்கி பள்ளிக்கு வந்தான் பலூனும் அவன் பின் தொடர்ந்து வந்தது.பள்ளியில் அவனுடைய நண்பர்கள் அந்த பலூனை பிடிக்க முயற்சி செய்தார்கள்.ஆனால் அவர்களிடம் அது சிக்காமல் பறந்து சென்றது. மாணவர்கள் அனைவரும் வகுப்பறைக்கு சென்றவுடன் அந்த பலூனும் அவனைத் தொடர்ந்து செல்ல முயற்சி செய்தது,அதைப் பார்த்து ஆசிரியர் அந்த சிறுவனை ஒரு அறையில் அடைத்து கதவை பூட்டி சென்றார். அந்த அறையை திறக்க சொல்லி அந்த பலூன் ஆனது ஆசிரியரை பின்தொடர்ந்து சென்று அவரை தொந்தரவு செய்தது.ஆசிரியரும் அறையைத் திறந்து அச்சிறுவனை வெளியே துரத்தி விட்டார்.

இருவரும் வெளியே செல்லும்போது வழியில் ஒரு கண்ணாடி இருந்தது.அந்தக் கண்ணாடியில் பலூன் தன் முகத்தை அழகு பார்த்துவிட்டு சென்றது பிறகு அந்த வழியில் அச்சிறுவனின் நண்பர்கள்அவனை பின் தொடர்ந்து வந்தனர். சிறுவன் ஒரு உணவகத்திற்குள் சென்றவுடன் அவன் நண்பர்கள் பலூனை தெரியாமல் எடுத்துச் சென்றனர். அவன் அந்த பலூனை தேடி வெளியே வந்த போது அந்த பலூனை வெடிக்க வைக்க நண்பர்கள் முயற்சி செய்தனர். ஆனால் அவன் அவர்களிடம் இருந்து அந்த பலூனை மீட்டு ஓடிச் சென்றான். நண்பர்கள் விடாமல் அவனை துரத்திச் சென்று அவனை பிடித்து விட்டு அந்த பலூனை கல்லால் அடித்தனர். அடித்தவுடன் அதில் உள்ள காற்று மெது மெதுவாக வெளியே சென்று பலூன்பறக்க முடியாமல் கீழே விழுந்தது. அதை வேறு ஒரு சிறுவன் வந்து தன் காலால் மிதித்தவுடன் பலூன் வெடித்து உயிரிழந்தது.

அதன்பின் அந்த நகரத்தில் உள்ள எல்லா சிறுவர்களிடமிருந்தும் அனைத்து பலூன்களும் அச்சிறுவனிடம் வந்து சேர்ந்தது.அவைகள் அனைத்தும் ஒன்று சேர்ந்து ஒரு பேராஷூட் போல அச்சிறுவனை மேலே தூக்கிச் சென்றது.

இணைப்பு

https://youtu.be/VexKSRKoWQY

## பறக்கும் பட்டங்கள்

FLIGHT OF KITES
அலி காவிதன்
கு.விஷ்ணு
ஒன்பதாம் வகுப்பு

ஒரு ஆசிரியர் ஒரு கிராமத்திற்குப் பாடம் எடுக்க பள்ளிக்கு வருகிறார். வரும் வழியில் ஒரு அழகான பட்டத்தைப் பார்க்கிறார். அந்த ஆசிரியருக்குப் பட்டம் என்றால் மிகவும் பிடிக்கும். அங்கு ஒருவர் வந்து, 'உங்கள் வீடு இதுதான்' என்று கூறினார். அவர் வீடு மிகவும் மோசமாக இருந்தது. அந்த வீட்டில் குருவி, கூடு கட்டி வாழ்ந்து வந்தது. அவர் அந்த வீட்டை அழகு படுத்தினார். அனைத்து மாணவர்களும் பள்ளிக்குச் செல்கிறார்கள். மாணவர்கள் அனைவரும் தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டனர். ஒரு மாணவன் மட்டும் தினமும் தாமதமாக வருவான். அந்த மாணவன் வகுப்பறையில் வந்து உட்கார்ந்தான். அவனைப் பார்த்து அனைத்து மாணவர்களும் சிரிக்கின்றனர். அவர் அந்த வகுப்பறையை மாற்றுகிறார். பள்ளி முடிந்தவுடன் அனைத்து மாணவர்களும் வீட்டிற்குச் சென்றனர். அடுத்த நாள் அனைத்து மாணவர்களும் விளையாடிக் கொண்டு இருந்தனர்.

தாமதமாக வரும் பையனை (முகமது) ஒரு வயதான தாத்தா அவனைப் பிடித்துக் கூட்டி வந்து 'பள்ளிக்குப் போ ' என்று சொன்னார். அவன் ஓடி விட்டான். அந்த ஆசிரியர் மறுபடியும் ஒரு பட்டத்தைப் பார்க்கிறார். அந்தக் கிராமத்தில் சில பேர் சண்டைப் போட்டுக் கொண்டிருந்தனர். அடுத்த நாள் அனைத்து மாணவர்களும் தேர்வு எழுதப் பள்ளிக்கு வந்தனர். ஒரு மாணவியை மட்டும் ஒருவன் வந்து கூட்டிச் சென்றான். தாமதமாக வரும் பையனை அந்த வயதான தாத்தா திட்டினார். நிறைய பேர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். அதை இரண்டு பெண்கள் பார்த்தனர். அன்று ஆசிரியர் வீட்டில் உட்கார்ந்து யோசித்தார். அதை அந்த மாணவன் கேட்டான். அந்த ஆசிரியர் மாணவர்கள் என்ன மதிப்பெண் எடுக்கப் போகிறார்கள் என்று நினைத்துக் கொண்டே தூங்கினார். அன்று அவர் வெளியே செல்லும் போது ஒரு பையன் அவரைத் பின்தொடர்ந்தான். எப்பொழுது பள்ளிக்கு பள்ளி திறக்கும் என்று பார்த்துக்கொண்டே இருக்கிறார். ஒருநாள் அந்த ஆசிரியர் ரோட்டில் சென்று கொண்டிருக்கும் போது ஒரு வாகனம் சரியில்லாமல் நின்று கொண்டிருந்தது. அவர் அந்த வாகனத்தைச் சரி செய்தார்.

தாமதமாக வரும் பையன் அந்த ஆசிரியரிடம் ஒரு குருவி முட்டையையும் கூட்டையும் கொடுத்தான். அன்று ஒரு நாள் பள்ளிக்கு ஒரு பையன் மட்டும் வந்தான். அந்தப் பள்ளிக்கு யாரும் வரவில்லை. நிறைய பேர் அந்த ஆசிரியரை பார்த்துக்கொண்டே இருந்தனர். அப்போது அந்த தாமதமாக வரும் பையன் ஒரு பட்டத்தைப் பறக்க விட்டுக் கொண்டிருந்தான். அந்தப் பட்டம் விடும் பையன் ஆசிரியரைப் பார்த்து ஓடி விட்டான். அந்த ஆசிரியர், "எனக்குப் பட்டம் விடுவது.

நீ வந்து பட்டத்தை பறக்க விடு" என்று கூறினார். அடுத்த நாள் பள்ளிக்கு அனைவரும் வந்தனர். ஆனால் அந்த பட்டம் விட்ட சிறுவன் மட்டும் வரவில்லை. அவன் அந்த தாத்தாவுடன் வேலை செய்து கொண்டிருந்தான். சில வாரங்கள் கடந்து விட்டது. அந்தப் பையனுக்கு அந்த ஆசிரியர் ஒரு அழகான பட்டத்தை செய்து கொடுத்தார். செய்து கொடுத்தது மட்டுமில்லாமல் அந்த பையனின் ஆசையை தெரிந்து கொண்டு அவரிடம் சேர்ந்து பட்டத்தைப் பறக்கவிட்டார். அந்த ஊரில் உள்ள அனைவரும் அவர்களைப் பார்த்து வியந்தனர். அவர்கள் அனைவரும் ஒரே இடத்தில் நின்றனர். அந்த ஆசிரியர் அவர்களிடம் அனைவரும் ஒற்றுமையாக இருங்கள் என்று கூறினார். ஆனால் யாரும் அவர் சொல்ல சொல்வதை கேட்கவில்லை :

அடுத்த நாள் அந்த தாமதமாக வரும் பையன் அனைத்து மாணவர்களை விட வேகமாகப் பள்ளிக்கு வந்து நன்கு உரக்க படித்தான். அனைத்து மாணவர்களும் அந்தப் பையனைக் கண்டு வியந்தனர். அந்த பையனின் ஆசை நிறைவேற்றப்பட்டதால் அவன் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தான்.

அந்த ஆசிரியர் சைக்கிளை எடுத்துக்கொண்டு வெளியே செல்கிறார். அதை ஒரு மாணவன் பார்த்துவிட்டு அவன் பின்னாலேயே ஓடிச் செல்கிறான். அதை அந்த ஆசிரியர் பார்த்து நின்று, "என்ன?" என்று கேட்டார். "இந்த ஊரை விட்டு செல்கிறீர்களா" என்று கேட்டார். அதற்கு அவர்| நான் சந்தைக்கு செல்கிறேன்" என்று சொல்லிவிட்டு சென்றார். அடுத்த நாள் பள்ளிக்கு ஆசிரியர் வரும்பொழுது அனைவரும் விளையாடிக் கொண்டு இருந்தனர். அனைத்து மாணவர்களுக்கும் பட்டம் செய்து கொடுத்தார். ஆனால் யாரும் பட்டத்தை பறக்க விடவில்லை. அனைவரும் படித்துக் கொண்டே இருந்தனர். அந்த தாமதமாக வரும் பையனை நினைத்து பெருமையோடு இருந்தார். மறுபடியும் அந்த சிறுவன் பட்டம் விட்டான். ஆனால் இந்த தடவை அவன் அந்த ஆசிரியரைக் கண்டு ஓடாமல் இருந்தான். அடுத்த நாள் அனைத்து மாணவர்களும் பள்ளி வந்து பாடம் கற்றுக் கொண்டனர். ஒரு பெரிய அதிகாரி பள்ளிக்கு வந்து அனைத்து மாணவர்களிடமும் கேள்வி கேட்டார். அந்த தாமதமாக வரும் பையனை கேள்வி கேட்கும் போது அந்த ஆசிரியர் தடுத்தார். சில வாரங்கள் கடந்தவுடன் அந்த ஆசிரியர் திரும்ப தன் ஊருக்கு செல்லும் நாள் வந்தது. அந்த ஆசிரியர் அனைவருக்கும் பென்சில் பேனா துணிகளை வாங்கிக் கொடுத்துவிட்டு அவர் செல்லும் போது அனைவரும் கண்ணீருடன் அவரைப் பார்த்துக் கொண்டிருந்தனர். அடுத்த நாள் அந்த ஆசிரியர் அவர் கிராமத்திற்குச் செல்கிறார். அவர் செல்லும்போது ஒரு நிமிடம் இன்று திரும்பிப் பார்க்கிறார்.

வெகு தொலைவில், கிராமத்திற்கு மேலே, வானத்தில் மேகங்களைப் போல் நிறைய மஞ்சள், சிவப்பு, பச்சைநிறப் பட்டங்கள் பறக்கின்றன.

o

இணைப்பு

https://youtu.be/HmR3Hl53JbQ

## ஸ்டாமர்

STAMMER

Mohammadreza Haji Gholam

சா.ஹரிணி
பத்தாம் வகுப்பு

இந்தத் திரைப்படம் ஈரானிய திரைப்படமாகும் இந்த திரைப்படம் குழந்தைகளுக்கான திரைப்படம் எனலாம் இந்த திரைப்படம் இரானிய மக்களின் வாழ்வு முறை மற்றும் வாழ்விடத்தை நமக்குத் தெரிய வைக்கிறது.

இதில் அண்ணன் தங்கைக்காக என்னவெல்லாம் செய்வான் என்று புரிய வைக்கிறது.ஒரு ஊரில் பள்ளியில் படித்துக் கொண்டு விக்கிறவன் தான் ரதூல் அவனோடு அவன் தங்கையும் அப்பள்ளியில் படித்து வருகிறாள்.

இதுவரை அவர்கள் பயின்ற பாடப்புத்தகம் மாறி அந்த ஆண்டு புது பாட புத்தகம் வந்தது.ஆசிரியர் இந்த ஆண்டு பாடப் புத்தகம் கொஞ்சம் கடினமாக வந்துள்ளது எனவே மாணவர்கள் அனைவரும் கவனமாக படிக்க வேண்டும் என்று வலியுறுத்தினார்.

ஒவ்வொரு நாளும் ஒரு மாணவன்/மாணவியை எழுப்பி புத்தகத்தில் உள்ள ஒரு பக்கத்தை கொடுத்து படிக்க சொல்வார்.அதில் ரதூல் இன் தங்கை சரியாக படிக்க மாட்டாள். அதனால் ஆசிரியர் ரதூல் இடம் உன் தங்கைக்கு நீ படிக்க சொல்லிக் கொடு இல்லையெனில் கதை புத்தகங்களை கொடுத்து படிக்க வை என்றார்.

இதனால் அவன் யோசிக்க ஆரம்பித்தான்.ஆசிரியர் ரதூல் இடம் ஒரு நூலகத்தை அமைக்கச் சொன்னார்.ரதூல் இந்த செய்தியை அவன் நண்பர்களிடம் சொன்னான்.ரதூல் நகரத்திற்கு சென்று அவனுக்கு தெரிந்தவர் மூலம் கொஞ்சம் புத்தகங்களை வாங்கினான்.

அதை ஒரு வண்டி மூலம் எடுத்து வந்தான்.வண்டி கொஞ்ச தூரம் சென்ற பிறகு பின் சாலைகளில் குண்டும் குழியுமாக இருந்தன.அதனால் வண்டி ஓட்டுநர் இனி இந்த வழியாக செல்ல இயலாது என்றார்.இதனால் ரதூல் வண்டியை விட்டு இறங்கி சென்று அவன் கிராமத்தில் உள்ள அவனின் வண்டியை அவனுடைய நண்பர்கள் உதவியால் கொண்டு வந்தான்.

அந்த வண்டியில் புத்தகங்களை ஏற்றுக் கொண்டு கிராமத்திற்கு வந்து அடைந்தான்.புத்தகத்தை அடுக்கி வைக்கரதூலின் நண்பர்கள் வீட்டில் ஏற்பாடு செய்தனர்.ஆனால் அவன் வீட்டில் ஒப்புக்கொள்ளவில்லை.பிறகு ஒரு பாழடைந்த ஒரு மண்டபத்தில் வண்டியை விட்டுவிட்டு வீடு திரும்பினார்கள்.அஞ்சு இரவு மழை பெய்தது ரதூலின் அம்மா துணிகளை எல்லாம் எடுத்தார்.

அப்பொழுதுதான் ரதூல் புத்தகங்கள் ஞாபகம் வந்தது.கிடு கிடுகிடுவென ஓடிச் சென்று பார்த்தான்.புத்தகங்கள் மழையில் நனைந்து கொண்டு இருந்தன.ஒரு தார்ப்பாயை எடுத்து வந்து அதை மூடினான்,பின்பு வீட்டிற்கு சென்றான் அடுத்த நாள் புத்தகங்களை வெயிலில் காய வைத்தான்.

அவனுடைய நண்பர்கள் மற்றும் அவன் தங்கையின் உதவியோடு இதையெல்லாம் ஆசிரியர் ரஸூலின் அம்மாவிடம் கூறினார்.ரதூல் இன் அம்மா வீட்டிற்கு பக்கத்தில் ஒரு இடம் இருக்கிறது.அதில் நூலகத்தை அமைக்க சொல்லுங்கள் என்றார்.இதை ஆசிரியர் ரதூல் இடம் சொன்னார்.ரதூல் அந்த இடத்திற்கு அவனுடைய நண்பர்கள் மற்றும் தங்கையுடன் சென்றான்.அந்த இடம் மிகவும் தூசியும் குப்பையுமாக இருந்தது.அதை இரண்டு நாட்களில் சுத்தம் செய்து புத்தகங்களை எல்லாம் அடுக்கி வைத்தனர்.

அடுத்த நாள் பள்ளிக்கு செல்லும்போது ரதூல் அந்த இடத்திற்கு சென்று பார்த்தான்.அந்த இடத்தில் மாடு கட்டப்பட்டு இருந்தது மற்றும் புத்தகங்கள் எல்லாம் நாசமாய் போகின.இதைப் பார்த்து ரதூல் மிகவும் வேதனை பட்டான் பள்ளியில் அவனுக்காக அவன் தங்கை காத்திருந்தாள்.

ஜன்னலை எட்டிப் பார்த்தவாறு இருந்தாள்.ஆசிரியர் அவளை எழுப்பி ஒரு பக்கத்தை கொடுத்து வாசிக்க சொன்னார்.அவளும் எழுந்து அதை நன்றாக படித்துக் கொண்டிருந்தாள்.அந்த நேரத்தில் ரசூல் ஓடி வந்து பார்த்தான்.அவன் தங்கை இவ்வளவு நன்றாக படிப்பதை பார்த்து திகைத்து நின்றான்.

இணைப்பு

https://youtu.be/21okfvtseAk

## *வகுப்பறையில் யாக்*

LUNANA: A YAK IN THE CLASSROOM
Pawo Choyning Dorji
பி.பிரஜன்

உக்யென் தனது ஐந்து வருட கட்டாயப் பயிற்சியில் நான்கு அரசாங்க ஆசிரியர் பயிற்சி முடித்துள்ளார். ஆனால் அவருக்கு ஆசிரியராக இருக்க ஆர்வம் இல்லை, பாடகராக ஆவதற்கு ஆஸ்திரேலியாவுக்குச் செல்ல விரும்புகிறார். தொலைதூர மலை கிராமமான லுனானாவில் கற்பிக்க அவர் நியமிக்கப்பட்டபோது, தனது வேலையை விட்டுவிட நினைக்கிறார், ஆனால் அவரது பாட்டி தனது கற்பித்தல் வேலையை முடிக்க அவரை வற்புறுத்துகிறார். தனது பாட்டிக்காக லூனானா செல்ல முடிவு செய்கிறார். லுனானாவுக்கு ஆபத்தான பாதையில் அவரை அழைத்துச் செல்லும் கிராம வழிகாட்டியான மிச்செனை உக்யென் சந்திக்கிறார். அவரது வருகையால் கிராமவாசிகள் உற்சாகமடைந்துள்ளனர், ஆனால் கிராமத்தின் மோசமான நிலைமையைக் கண்டு திகைத்த உக்யென், வந்ததற்கு வருத்தம் தெரிவித்து, மீண்டும் அழைத்துச் செல்லுமாறு கேட்டுக்கொள்கிறார். கிராமத் தலைவியான ஆஷா, கழுதைகளுக்கு ஓய்வெடுக்க நேரம் தேவை என்றும், சில நாட்களில் உக்யனை மீண்டும் அழைத்துச் செல்ல முடியும் என்றும் தெரிவிக்கிறார். மறுநாள் காலை, உக்யனை கிளாஸ் கேப்டனான பெம் ஜாம் எழுப்பினார், அவர் வகுப்பறையில் குழந்தைகள் அவருக்காகக் காத்திருப்பதாகச் சொல்கிறார். "எதிர்காலத்தைத் தொடும்" திறன் ஆசிரியர்களுக்கு இருப்பதாக குழந்தைகள் நம்புவதால், உக்யென் அவர்மீது கொண்ட பாசத்தால் அதிர்ச்சியடைந்தார். அவர் ஒரு வருடம் முழுவதும் தங்கி கற்பிக்க முடிவு செய்கிறார்.

உக்யென் அடுத்த நாள் கற்பிப்பதற்குச் சிறப்பாகத் தயாராகி, சுவரில் நேரடியாக கரியால் எழுதுவதன் மூலம் கரும்பலகை இல்லாததற்கு ஒரு தீர்வை மேம்படுத்துகிறார். மிச்சென் பின்னர் அவருக்காக ஒரு தற்காலிக கரும்பலகையை உருவாக்குகிறார். உக்யென் மெதுவாக வகுப்பறையை மேம்படுத்துகிறார், குழந்தைகள் எழுதும் பொருட்கள் தீர்ந்துவிடும் போது ஜன்னல்களை மறைக்கும் காகிதத்தைத் தியாகம் செய்கிறார். சமூகத்தில் யாக்ஸ் மதிக்கப்படுவதால், கடந்தகால வாழ்க்கையில் ஆசிரியர் ஒரு யாகாக இருந்திருக்கலாம் என்று ஆஷா கூறுகிறார். உக்யென் விரைவில் குழந்தைகளுக்கு விருப்பமானவராக மாறுகிறார், தனது கிதாரில் பாடல்களைப் பாடுகிறார். அவர்களுக்கு கணிதம், ஆங்கிலம் மற்றும் ஜோங்கா ஆகியவற்றைக் கற்றுக்கொடுக்கிறார். குளிர்காலம் வரும்போது உக்யென் வெளியேறத் திட்டமிட்டுள்ளார், உக்யென் திரும்ப மாட்டார் என்பதை அறிந்ததும் அவர்கள் வருத்தப்படுகிறார்கள்.

உக்யென் பின்னர் ஆஷாவின் மருமகள் சல்டனைச் சந்திக்கிறார், அவர் ஒரு பாரம்பரிய பாடலை மலைப்பகுதியில் பாடுகிறார். அவள் அதை கிராமத்திற்குப் பிரசாதமாக தினமும் பாடுவதாகச் சொல்கிறாள், அவன் அதை அவனுக்குக் கற்றுக்கொடுக்கும்படி கேட்கிறான்; அவர்கள் தினமும் சந்திக்கிறார்கள், அவர் அதை எப்படிப் பாடுவது என்பதை மெதுவாகக் கற்றுக்கொள்கிறார். இது யாக் லெபி லதார் என்று அழைக்கப்படுவதாகவும், கிராமத்தின் நன்மைக்காகத் தனக்குப் பிடித்த யாக்கைக் கொல்ல வேண்டும் என்று புலம்பிய உள்ளூர் யாக் மேய்ப்பரால் எழுதப்பட்டதாகவும் அவர் கூறுகிறார்; கடைசி வசனம் யாக்கின் கண்ணோட்டத்தில் பாடப்பட்டது, சால்டன் பின்னர் உக்யெனுக்கு நோர்பு என்ற ஒரு யாக்கைப் பரிசாக அளித்தார், இதனால் அவர் அதன் சாணத்தை நெருப்பை மூட்ட முடியும். குளிரின் காரணமாக, உக்யென் நோர்புவை வகுப்பறையில் அனுமதிக்கிறார், அவர் பாடங்களின் அங்கமாக மாறுகிறார்.

குளிர்காலம் நெருங்கிக்கொண்டிருப்பதாகவும், பனியால் மூடப்படுவதற்குள் அவன் கிளம்ப வேண்டிய நேரம் வந்துவிட்டது என்ற செய்தியுடன் ஆஷா உக்யனை அணுகுகிறாள். அடுத்த வசந்த காலத்தில் உக்யனை திரும்பி வரும்படி அவர் கேட்கிறார், ஆனால் உக்யென் பூட்டானை விட்டு வெளியேற விரும்புவதாக் கூறுகிறார், இதனால் அவருக்கு ஏமாற்றம் ஏற்பட்டது. வசந்த காலத்தில் ஒரு சிறந்த ஆசிரியர் வருவார் என்று சால்டனுக்கு உறுதியளிக்கிறார், குழந்தைகள் மட்டுமே அதற்கு நடுவர்களாக இருக்க முடியும் என்றும், அவர்கள் அனைவரும் உக்யனை நேசிக்கிறார்கள் என்றும் சால்டன் கூறுகிறார். அவர் என்றாவது ஒரு நாள் திரும்பி வந்து தனக்காக யாக் லெபி லாதர் நிகழ்ச்சியை நடத்துவார் என்று அவள் நம்புகிறாள்.

கிராமத்தினரிடம் இருந்து இதயப்பூர்வமான விடைபெற்ற பிறகு உக்யென் லுனானாவை விட்டு வெளியேறுகிறார். பெம் ஜாம் எல்லா குழந்தைகளிடமிருந்தும் ஒரு கடிதத்தைக் கொடுக்கிறார், சால்டன் அவருக்கு ஒரு தாவணியைப் பரிசாக வழங்கினார். அவர் புறப்படும்போது ஆஷா யாக் லெபி லதாரைப் பாடுகிறார், மேலும் ஆஷா முதலில் பாடலை எழுதியதாக உக்யனுக்கு மிச்சென் தெரிவிக்கிறார். உக்யென் பின்னர் குழந்தைகளிடமிருந்து வந்த கடிதத்தைப் படித்து, அவருக்கு நன்றி தெரிவித்து, வசந்த காலத்தில் திரும்பி வரும்படி அவரை வற்புறுத்தும்போது அவர்களுக்குப் பிடித்த ஆசிரியர் என்று அழைத்தனர். மலையிலிருந்து கீழே செல்லும் வழியில், உக்யென் ஒரு சன்னதியில் நின்று, பாதுகாப்பான பாதைக்கு ஒரு பிரசாதத்தை விட்டுவிட்டு, திரும்பி வருவேன் என்று நம்புகிறேன் என்று கூறிக்கொள்கிறார்.

உக்யென் ஆஸ்திரேலியாவுக்குச் செல்கிறார், அங்கு அவர் ஒரு பாரில் நிகழ்ச்சி நடத்துகிறார், பாடுகிறார். ஆனால் யாரும் அவரைக் கவனிக்கவில்லை. அவர் தனது பாடலை இசைப்பதை நிறுத்திவிட்டு, யாக் லெபி லாடார் என்ற பாடலைப் பாடுகிறார். அரங்கமே ஒரு வித அமைதி அடைகிறது. அவர்கள் இதயப்பூர்வமான பாடலை அப்போதுதான் கேட்பதாக உணர்கிறார்கள்.

0

## என் லூனானா அனுபவம்

சே. ரூபஸ்ரீ

தி யாக் இன் தி கிளாஸ்ரூம் படத்தின் கதை எனக்கு வித்தியாசமாகவும் மிகவும் அற்புதமாகவும் இருந்தது. அதைப் பார்க்கும்போது என் உதட்டோரம் அழகிய புன்னகை. என்னைச் சுற்றி எத்தனை பேர் இருந்தாலும், அந்த படத்தில் உள்ள அழகான காட்சிகளைக் கண்டு, அங்கு இருப்பதுபோலவே உணர்ந்தேன். இரவு பத்து மணி. வீட்டில் உறக்கம் வராமல் என் கண்முன் காட்சிகள் தெரிந்தன. உடனே வரைய தொடங்கினேன். முதலில் நீல நிற வானம். அதற்குக் கீழே அழகிய கரடுமுரடான மலை. அதற்குப் பச்சை, கரும்பச்சை தீட்டினேன். பிறகு ஒரு ஓரமாக அழகிய வீடு. அதன் அருகில் நிலம், பூக்கள், மஞ்சள் நிற ஆறு. அதற்குக் கீழே ஒரு பாறையில் அமர்ந்தபடி, மலையைநோக்கித் தியானம் செய்யும் ஒரு சிறுமி என வரைந்து முடித்தேன். விடியற்காலை ஆகிவிட்டது. என்னால் பூடானில் உள்ள இடத்திற்குச் சென்று அழகிய காட்சியைப் பார்க்க முடியவில்லை என்றாலும், இந்த ஒவியம் வழியாக ஒரு அழகிய பூட்டான் இப்போது என்னிடம் இருப்பதாக உணர்கிறேன். பிறகு, என் ஓவியம், குகூள் வரைபடத்தில் லூனானா கிராமத்துப் படங்களுடன் இணைக்கப்பட்டது. சந்தோஷமாய் இருக்கிறேன்.

இணைப்பு

https://www.google.com/maps/place/LUNANA+VILLAGE/@28.0344402,90.0919887,3a,75y,90t/data=!3m8!1e2!3m6!1sAF1QipPXXdcQV7OHqzb8YZx-mMRkaZNfQUI7_geeJAce!2e10!3e12!6shttps:%2F%2Flh5.googleusercontent.com%2Fp%2FAF1QipPXXdcQV7OHqzb8YZx-mMRkaZNfQUI7_geeJAce%3Dw203-h140-k-no!7i3014!8i2079!4m11!1m2!2m1!1slunana!3m7!1s0x375f8f2afa49b8f1:0x8112533fd021f62f!8m2!3d28.0344402!4d90.0919887!10e5!15sCgZsdW5hbmGSARJ0b3VyaXN0X2F0dHJhY3Rpb27gAQA!16s%2Fg%2F11h_bx5cfn?entry=ttu

## *செர்ரியின் சுவை*

Taste of Cherry

Abbas Kiarostami

அ.திவ்யா

ஒன்பதாம் வகுப்பு

கதையின் தொடக்கத்தில் Betty என்பவர் தன்னுடைய மகிழுந்தை எடுத்துக்கொண்டு நகரம் முழுவதும் தொழிலாளரைத் தேடி சுற்றிக்கொண்டு இருப்பார். ஒருவர் வழியில் நடந்து போய்க்கொண்டு இருப்பார். அவரிடம் நீ எங்கு போக வேண்டும் என்று சொல். நான் உன்னை அங்க கொண்டுபோய் விடுகிறேன் என்று Betty சொல்வார். அதற்கு அவர் நான் இங்குதான் வேலை செய்கிறேன் என்பார். உனக்கு நான் ஒரு வேலை தருகிறேன் என்று Betty சொல்வார். தேவையில்லையென்று சொல்லிவிட்டு கூப்பிட கூப்பிட அங்கிருந்து அவர் போய்விடுவார். Betty அந்த இடத்தைவிட்டு தன்னுடைய தேடல் பயணத்தைத் தொடர்வார்.

அப்பொழுது அவர் போகும் வழியில் ஒரு இராணுவ வீரர் அவரிடம் மகிழுந்தில் தானும் வருகிறேன் என்று உதவி கேட்பார். அவர் இராணுவ முகாமிற்கு செல்ல வேண்டும் என்று கூறுவார். Betty அவரிடம் இதற்கு முன் என்ன வேலை செய்தீர்கள் என்று கேட்பார். நான் இதற்கு முன் விவசாயம் செய்தேன் என்று அந்த இராணுவ வீரர் குறிப்பிடுவார். அதற்கு நானும் ஒரு இராணுவ வீரன்தான் என்று Betty சொல்வார். நான் சொல்கின்ற வேலையை செய்தால் உங்களுக்கு நிறைய பணம் தருகிறேன் என்று Betty சொல்வார். என்ன வேலை என்று அந்த இராணுவ வீரர் கேட்பார். Betty ஒரு இடத்தில் மகிழுந்தை நிறுத்திவிட்டு இராணுவ வீரரை மகிழுந்தை விட்டு இறங்க சொல்வார். ஆனால் இராணுவ வீரர் இறங்க மாட்டார். Betty சொல்வார் இங்கு ஒரு பள்ளம் தெரிகிறதா? நாளை காலை 6 மணிக்கு இங்கு வந்து எனது பெயரைச் சொல்லி இரண்டு முறை கூப்பிடுங்கள். நான் அந்த பள்ளத்தில்தான் இருப்பேன். நீங்கள் கூப்பிடுவதற்கு நான் பதில் சொன்னால் என்னை மேலே தூக்கி விடுங்கள். எனது மகிழுந்தில் இரண்டு இலட்சம் பணம் இருக்கும். அதை எடுத்துக்கொண்டு நீங்கள் போகலாம். அதுவே நான் எந்த பதிலும் சொல்லாமல் இருந்தால் பள்ளத்தில் மண்வெட்டியால் மண்ணை வாரி போட்டுவிட்டு மகிழுந்தில் உள்ள பணத்தை எடுத்துக்கொண்டு நீங்கள் சென்றுவிடுங்கள் என்பார். இராணுவ வீரர் அதை மறுத்துவிடுவார்.

அதனையடுத்து Betty மறுபடியும் தனது தேடலைத் தொடங்குவார். போகும்போது ஒரு பாதுகாவலைப் பார்ப்பார். Betty அவரை பார்த்து மகிழ்ச்சியாக இருக்கீறீர்கள் போல என்று கேட்பார். நீங்கள் என்னுடன் வந்து சேர்ந்துகொள்ளுங்கள் என்று கூறுவார். அப்பொழுது சாளரம் வழியாக தூரத்தில் ஒருவர் இருப்பதைப் பார்த்து யார் அவர் என்று பாதுகாவலரிடம் கேட்பார். அவர் ஒரு போதகர் என்று பாதுகாவலர் குறிப்பிடுவார். அடுத்து Betty பாதுகாவலை தன்னுடன் வரும்படி அழைப்பார். அதற்கு பாதுகாவலர் மறுத்துவிடுவார். பிறகு அந்த போதகரை அழைத்துக்கொண்டு மகிழுந்தில் செல்வார். போதகரிடம் அந்த வேலையைப் பற்றிக் கூறும்போது அவரும் மறுத்துவிடுவார்.

அடுத்து Betty ஒரு இடத்தில் தனியாக உட்கார்ந்து கொண்டிருப்பார். இது எதை குறிக்கிறது என்றால் அவர் மனது முழுவதும் கவலையில் ஆழ்ந்திருப்பதுபோலவும், சாவது ஒன்றுதான் ஒரே தீர்வு என்பதுபோலவும் இருப்பதைக் காட்டுகிறது. அடுத்து மூன்றாவதாக ஒரு நபரை தேடி அவரிடமும் அந்த பள்ளத்தைக் காட்டிவிட்டு திரும்ப அழைத்துச்செல்வார். அந்த மூன்றாவது நபர் எனது வாழ்க்கையில் நடந்த ஒரு சம்பவத்தை உங்களோடு பகிர்கிறேன் என்பார். எனக்கு திருமணம் ஆன தொடக்கத்தில் மிகவும் பிரச்சனைகள் இருந்தன. நானும் உங்களைப் போலவே தற்கொலை செய்துகொள்ளலாம் என்று முடிவு எடுத்தேன். மகிழுந்தில் கயிறைத் தூக்கிப் போட்டுவிட்டு மல்பெரி தோட்டத்திற்கு சென்றேன். அந்த மரத்திலிருந்த மல்பெரியை சாப்பிட்டுப் பார்த்தேன். மிகவும் சுவையாக இருந்தது. திடீரென்று மலைகளுக்கு மேலே சூரியன் உதயமாவது என்னுடைய கண்ணிற்கு தெரிந்தது. மாணவர்கள் பள்ளிக்கு சென்று கொண்டு இருந்தார்கள். அவர்கள் என்னை பார்த்து அந்த மரத்தை உலுக்கிறிங்களா? நாங்கள் செர்ரி பழங்கள் சாப்பிட வேண்டும் என்று கேட்பார்கள். அவர் அந்த மரத்தை உலுக்கி பழங்களை கீழே விழ வைக்கிறார். மாணவர்கள் அவற்றை உண்டு மகிழ்ச்சியடைகிறார்கள். சாகவேண்டுமென்றுதான் என்று சென்றேன். இந்த ஒரு பழம் என்னை வாழ வைத்தது. இந்த உலகில் எவ்வளவோ அதிசயம் இருக்கிறது. இவற்றையெல்லாம் பார்க்காமல் நீ கண்ணை

மூட வேண்டுமென்று பார்க்கிறீயா என்று கேட்பார். Betty நான் சொன்னதை மட்டும் நீங்கள் செய்யுங்கள் என்று குறிப்பிடுவார். அந்த நபரும் என்னுடைய குழந்தைக்கு உடல்நிலை சரியில்லை, அதனால் இதற்கு ஒப்புக்கொள்கிறேன் என்று சொல்வார். Betty அவர் சேரவேண்டிய இடத்தில் இறக்கி விட்டுவிட்டு போய்விடுவார். மறுபடியும் Betty அவரை வந்து பார்ப்பார். நீங்கள் பள்ளத்தில் வந்து என்னைக் கூப்பிடும்போது இரண்டு கல்லைத் தூக்கி என்மேலே போட்டுப்பாருங்கள். நான் தூங்கிக் கொண்டு கூட இருக்கலாம். என்னை எழுப்பிப் பாருங்கள், என்று சொல்லிவிட்டு அங்கிருந்து கிளம்பிவிடுவார். பொழுது சாய்ந்தவுடன் அவர் அந்த பள்ளத்தாக்கிற்கு செல்வார். மின்னல் அடிக்கும்பொழுதும் மட்டும்தான் அவருடைய முகம் தெரியும். முதலில் மின்னல் அடிக்கும்பொழுது அவர் விளித்துக்கொண்டுதான் இருப்பார். இரண்டாவதாக மின்னல் அடிக்கும்போது Betty கண்ணை மூடிக்கொண்டு இருப்பது தெரியவரும். அந்த இடமே இருளாக இருக்கும். இந்த கதையிலிருந்து நாம் இறந்துவிட்டால் நம்மை சுற்றி உள்ள அழகான நினைவுகளை நம்மால் பார்க்க முடியாது. அதனால் தற்கொலை ஒரு தீர்வு இல்லையென்பது தெரிய வருகிறது.

0

இணைப்பு

https://www.youtube.com/watch?v=lNVA6LusW5M